Registered No. M. 2330.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு"



| | | |
|---|---|---|
| மலர் எ | ஸ்ரீமுக ஆண்டு பங்குனித் திங்கள் 1934 ௵ மார்ச்சு௴ | இதழ் ௩ |



சைவ சித்தாந்த மகாசமாஜ
28-ஆம் ஆண்டு நிறைவு விழா

## சைவ மங்கையர் மகாநாட்டுத் தலைமைப் பேருரை

[திருவளர்செல்வி. மாணிக்கவாசக சரோஜனியம்மையார்]

(இதழ் எ - மலர் உ. - ௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)

**கா**ரைக்காலில் வணிகர் குலத்தில் தோன்றிய புனிதவதியார் இளமைப்பருவந்தொட்டே பல அறிவு நூல்களைக் கற்றுச் சிவபிரானிடத்தும் அவர்தம் அடியாரிடத்தும் மெய்யன்பு கொண்டவராய்ப் பசித்துவரும் அடியார்களுக்குத் திருவமுது உதவியும், உறுப்பறைகளையும், ஏழைகளையும் கண்டால் மனமிரங்கி அவரவர்க்கேற்றவண்ணம் உதவிசெய்தும் தம் காலத்தைப் பயன்படுத்தி வந்தார். மங்கைப்பருவ

மடைந்தபின் பெற்ருரும், உற்ருரும் செல்வக்குலத்து வந்த பரமதத்தன் என்பானைக் கணவனுகத் தெரிந்தெடுத்துச் சிறப்புடன் மணமுடித்துத் தம் அருந்தவப் புதல்வியைப் பிரிய மனமில்லாமல், தமதிருப்பிடத்திற் கருகாமையிலேயே சிறந்த ஒரு மாளிகை அமைப்பித்து, வேண்டிய சீர் செல்வங் களைக் கொடுத்து, அவர்கள் இருவரும் அதில் வாழும்படி ஏற் பாடு செய்தார்கள். பரமதத்தன் பொருளீட்டுவதில் முயற்சி யுடையவனுயிருந்தான். அம்மையார், தம் கணவர்க்கேற்றபடி நடந்து, என்றும்போல் சிவபிரானிடத்தும், அவர்தம் அடியா ரிடத்தும் அன்புகுன்ருதவரா யிருந்தார். இல்லறத்தை இனிது நடாத்தி வரும் நாளில் பரமதத்தனைக் காணவந்த ஒருவர், இரண்டு மாங்கனிகளைக் கொண்டுவந்து கொடுக்க, அவர் அதனை வீட்டிற் கனுப்பிவைத்தார். அச்சமயம் சிவ னடியார் ஒருவர் விருந்தினராக வர, வீட்டில் திருவமுது மட்டும் இருந்தும், உடன்தொட்டு உண்ணக் கறியமுது இல் லாததால், அம்மையார் கணவர் அனுப்பிய மாங்கனிகளி லொன்றை அவருக்கு அளித்துவிட்டார். கணவர் வந்து உண்ணும்போது தமக்கு வைத்த பழத்தினை உண்டு சுவையா யிருந்தமையால் மற்ருெரு பழத்தையும் கொண்டு வரும்படி சொல்ல, அம்மையார் இறைவனை வேண்ட, அவனருளால் ஒரு கனி அவர்தம் கையில் வந்தது. அதைக் கணவனுக்கு அளிக்க, அதனை உண்ட அவன் அப்பழமும் முன் உண்டபழத் தினைக்காட்டிலும் சுவையில் மேம்பட்டிருப்பதை உணர்ந்து காரணம் வினவலும் புனிதவதியார் உள்ளது உள்ளவாறு தெரிவிக்க, அவன் அதை நம்பாமல், மற்ருெரு பழம் தெய் வத்தை வேண்டிப் பெறுமாறு சொல்ல, அவர் மனமிரங்கிப் பிறிதொரு கனி அருளுமாறு கடவுளை மிகவணங்கி வேண்ட லும், கடவுளருளால் கனி வரப்பெற்ருர். அதை அவ் வம்மை கணவன் கையிற் கொடுக்க அப்போது அக்கனி மறைந்து விட்டது. இந்தப் புதுமையைக் கண்டபோது பரமதத்தன் தன் மனைவி, மக்களிற் சேர்ந்தவளல்லள் என்றும் ஒரு தெய்வமே என்றும் அறிந்து அன்று முதல் மனைவியுடன் நெருக்கமாக இராமல் சின்னுட்களிருந்து, பிறகு வாணிகத்தின் பொருட்டு வெளியூர் செல்வதாகக் கூறி

வேற்றூர் சென்று வேறொரு பெண்ணை மணமுடித்துக் கொண்டு ஒரு பெண் குழவியை ஈன்று மகிழ்வுடன் வாழு நாளில், இச்செய்தியை அறிந்த உறவினர் யாவரும் அம்மையாரை அவர்தம் கணவர் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லலும், அவன் மனைவிமக்களுடன் வந்து தன் மனைவியின் தாள்களில் வீழ்ந்து வணங்கினான். இதுகண்ட உறவினர் உளந் திகைத்துக் காரணம் வினவ, அவன் உண்மையை உரைத்துத் 'தெய்வத்தன்மை பொருந்திய மனைவியைத் தன் குலதெய்வமாக வணங்குவதைத் தவிர்த்து மனைவியாகக் கருதலாகாது' என்று தெரிவித்தலும், அம்மையார் மனம் வருந்தாமல் தம் கணவர்க்கே பயன்படக்கூடிய அழகிய தமது உடல் அவர் வெறுத்தபின் வேண்டாமையும், தனித்திருக்க வேண்டியிருப்பதால் தமது அழகிய உருவிற்குத் தீயரால் தீங்கு நேரிடாமையும் கருதித் தம் உருவத்தை மாற்றிப் பேய் வடிவம் அருளுமாறு கடவுளை வேண்டிப் பெற்று உலகத் தொடர்பை ஒழித்துத் தலையால் நடந்து வெள்ளிமலை சென்று மற்றொரு பிறவி எடாமை வேண்டும், எடுக்கநேரின் இறைவனை மறவாதிருக்கவேண்டும், எக்காலும் ஐயன் அருகிருந்து அருட்கூத்தைக் காணல் வேண்டும் எனப் பெருமானை வேண்டிப் பெற்று திருவாலங்காட்டிலேயே இருந்து இறைவனை வணங்கிக் காலங் கழித்தார். அவர் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டைமணிமாலை, கோயில் மூத்த திருப்பதிகங்கள் பாடியருளினர். புனிதவதியாரோ செல்வக் குடியிற் பிறந்து அருமையாய் வளர்க்கப்பட்டவர். அவர்தங் கணவரோ அறிவு மேம்பாட்டிலோ தெய்வ நேயத்திலோ அம்மையின் தகுதிக்கேற்றவரல்லர் என்று தெரிகின்றோம். மனைவிக்கு வேண்டுமே என்கிற நினைவில்லாமல் மற்றைப் பழத்தையும் விரும்பியதிலிருந்தும், மனைவியார் உண்மையை உரைத்தபோதும் அதை நம்பாமையிலிருந்தும் அவர் தம் மனைவியை உள்ளபடி உணர்ந்து காதலிக்கவில்லை யென்பது புலப்படுகின்றது. ஏற்ற கணவனில்லாவிடினும் அவனைப் பாராமுகஞ் செய்யாமல் பணிவுடன் நடந்து கடமையில் பிசகாமலிருந்து கணவன் தானே வெறுத்தபோதும் வருந்தாமல் உலக இன்பத்தை முற்றுந் துறந்து தம் முழு மனத்

தையும் கடவுள் பால் செலுத்திவிட்டார். கணவரிடத்து இவர்க்கேற்பட்ட அன்பு கடமையன்பே. கடவுளிடத்து ஏற்பட்டது உண்மை அன்பு. இவர் நூல்கள் எழுதியது போற்றத்தக்கது.

இனிப் பாண்டிநாட்டின்கண் சைவசமயத்தை வளர்த்த மங்கையர்க்கரசியாரைப்பற்றிச் சிறிது கூறுவேன். மதுரையை ஆண்டுவந்த கூன்பாண்டியன் மனைவியாய மங்கையர்க்கரசியார் பாண்டிநாடு முழுவதும் சமண சமயம் பரவி வருவதையும் தம் கணவரும் அம்மதத்தைத் தழுவி நிற்பதையுங் கண்டு மனமிக வருந்தினாராயினும் தம் கணவரைச் சிறிதும் வெறுமல் தம் கணவரை உயிரினும் மேம்பட்டவராகக் கருதி அவர் தம் நலத்திற்காக அவரது மனம் மாறும் பொருட்டுக் கடவுளை வேண்டிவந்ததுமன்றி, அமைச்சராய குலச்சிறையாரைத் துணையாகக்கொண்டு திருஞானசம்பந்தப் பெருமானைத் தம் நாட்டிற் கழைப்பித்து வைத்து அவருக்குச் சமணர்கள் தீங்கு இயற்றியபோதெல்லாம் மனமிக வருந்தி ஞானசம்பந்தரைக் கொண்டே தமது ஆருயிர்க் கணவனும், குடிகளும் சிவபிரானது உண்மையை உணரும்படி செய்து சைவ சமயத்தைத் துலங்குமாறு செய்தார். இதில் கூன்பாண்டியன் ஓர் அரசனுயிருந்தும் தன் மனைவியைத் தன் விருப்பப்படி நடத்த உரிமையுடையவனுயிருந்தும், நடுவு நிலைமையும் மனைவிமீது மட்டற்ற காதலும் உடையவனுயிருந்ததனல் தனது கொள்கைப்படி நடக்கும்படி மனைவியை வற்புறுத்தாமலும் கொள்கைக்கு மாறுபட்டிருந்தமையால் மனைவிமீது சீற்றங் கொள்ளாமலும் அரசியாரை அன்பாக நடத்திவந்தான். ஆகவே, அரசன் மங்கையர்க்கரசியாருக்கு எல்லா வகையிலும் ஒத்த கணவனே யாவன். அரசியோ ஒரு சோழ அரசனின் புதல்வி யாவள். கல்வி அறிவுடையவள். தங்கணவன் பிறமதத்தில் பற்றுக்கொண்டிருப்பதை உணர்ந்தும் அவன்மீது சீற்றங்கொண்டு பராமுகஞ் செய்யாமலுங் கடமையில் வழுவாமலும் கணவனைத் தன்னுயிர் போற் கருதி வேண்டும் பணிவிடைகளை அன்புடன்செய்து மனம் கோணுதபடி நடந்தும் கற்பின் வல்லமையாற் கடவுள் அருளைப் பெற்றும் தம் கணவனையுஞ் சைவ சமயத்திற்குத்

திருப்பினர். இவ்விருவருக்கும் ஒத்த அறிவும், ஒத்த பண்பும், ஒத்த காதலும் இருந்தமை இதனல் அறியப்படும்.

திருமுனைப்பாடி நாட்டின் ஒரு பகுதியாய திருவாமூர் என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் தோன்றிய திலகவதியார் என்னும் அம்மையார் இளமைப் பருவந்தொட்டே சிறந்த இயற்கை உடையவராயும், சிவபிரானிடத்துப் பேரன்பு உடையவராகவும் இருந்துவர, பெற்றோரால் அவருக்குக் கணவராகக் குறிக்கப்பட்ட கலிப்பகையார் போர் மேற் சென்று உயிர் துறக்க, திலகவதியார் அவரை மணவாதிருந்தும் அவரையே கணவராகக் கருதி அவர் மரணத்திற்காக உள்ளம் நொந்து உடன் துறக்க விரும்பினராயினும், உடன் பிறந்தாரின் வேண்டுகோட் கிரங்கி உலகப்பற்றை ஒழித்துத் துறவறக் கோலம் பூண்டு திருவதிகையில் திருத்தொண்டுசெய்து கொண்டிருக்கையில், தம் சகோதரர் சமண சமயத்தைச் சார்ந்திருப்பதை எண்ணி மிக வருந்தி சிவபிரானை மிகவும் வேண்டி அவனருளால் தம் அருமைத் தம்பியார் மனம் திரும்பிச் சிவபிரானிடத்துப் பேரன்பு கொள்ளும்படிச் செய்தார்.

மணமாகாவிடினும் குறிக்கப்பட்ட கணவர் மரணத்திற்குப் பின் வேறு ஒருவரையும் மணக்காமல் கைம்பெண் போலவே நடந்துவந்த திலகவதியாரின் கற்பின் திறம் கவனிக்கத்தக்கது. சிவபிரான் அருளை அவர் பூரணமாய்ப் பெற்றிருந்தாரென்பதை அவர் வேண்டுகோட் கிணங்கி எம்பெருமான் சூலைநோய் கொடுத்து அவர்தம் சோதரர் திருநாவுக்கரசு நாயனரை உய்யும் நெறி காட்டியதிலிருந்து நன்கு விளங்குகிறது. சகோதரிகளே! இவ்வாறல்லவோ நம் நாட்டுச் சகோதரிகள் தொண்டு செய்தல்வேண்டும்.

சுருங்கச் சொல்லின், உலகில் பாதி பெண்மக்களாயிருத்தலால் நாட்டின் முன்னேற்றத்திற்கும், சமய வளர்ச்சிக்கும் பெண் மக்கள் இன்றியமையாதவர்களாயிருக்கின்றார்கள். மேனட்டில் கிறித்தவ மதத்தைப் பரப்புவதற்குப் பெண் மக்கள் மிகவும் உழைத்துவருவதே போதிய சான்றாகும். புத்தர் காலத்தில் புத்த மதத்தைப் பரவச் செய்தவர்

களில் பெண்பாலார் மிகுதியாக இருந்தார்களென்று சரித்திர வாயிலாய்த் தெரியவருகின்றது. எனவே, நம் சகோதரிகள் ஒழிந்த நேரங்களில் வீண் பேச்சுப் பேசியும், விகடத்தாள் களையும் கதைகளையும் படித்தும், காலத்தை வீணாகக் கழிக் காமல் சைவ சமயத்தைப் பரவச்செய்வதிலும், நந்தெய்வத் தமிழ் மொழியை வளர்ப்பதிலும் இவ்விரண்டின் முன்னேற் றத்திற்குத் தடையா யிருந்துவரும் மூடப்பழக்க வழக்கங் களை ஒழிப்பதிலும் தொண்டு செய்வதில் ஈடுபடுதல் வேண்டும்.

பண்டைநாளில் கோயிலுக்கும், சமயத்திற்கும் உள்ள பெருமை இப்போது தீண்டாமை என்னும் கொடிய வழக்கத் தால் குறைந்திருக்கின்றது. நம் அரும் பெருஞ் சைவ சமயா சிரியர்களெல்லாம் சாதிவேற்றுமை பாராட்டவில்லை என் பது அவர்கள் அருளிய பாடல்களில் விளங்குகின்றது. எடுத்துக்காட்டாக “பத்தராய்ப் பணிவார்களெல்லார்க்கு மடியேன் பரமனையே பாடுவார்கள் எல்லார்க்கும் அடியேன்” என்று சுந்தரமூர்த்தி நாயனரும், “ஆவுரித்துத் தின்றுழ லும் புலையரேனும் கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில் அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளாரே ” என்று திரு நாவுக்கரசு நாயனரும் பாடி எல்லா அடியார்களும் அவரவர் குலம் பாராமல் அன்பு பாராட்டி வந்தார்கள். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் தாழ்ந்த குலத்தைச் சார்ந்த திருநீலகண்டயாழ்ப்பாணரைத் தாம் போகுமிடமெல்லாம் உடன் அழைத்துச் சென்றதுமன்றி, அவரைப் பல கோவில் களினுள் எல்லாம் அழைத்துச் சென்றார். அந்நாளில் மக்க ளும் அதை மறுத்தார்களென்பது தெரியவில்லை. கடவுளும் சாதிவேற்றுமை கருதாமல் தம்மிடத்தில் அன்பு கொண் டார்க்கு அருள் அளிப்பர் என்பது நம் நந்தனர்க்குக் காட்சி கொடுத்து ஏற்றுக்கொண்டமையால் விளங்கும். எனவே, சைவ சமயமும், பாடல்பெற்ற கோவில்களும் பண்டைநாட் பெருமையை அடைவதற்கு எம்பெருமான் எழுந்தருளி யுள்ள கோவில்களினுள் சாதிவேற்றுமை பாராட்டாமல் எல்லா மக்களையும் விடும்படி ஏற்ற முயற்சியும், தொண்டும்

செய்ய நம் சகோதரிகள் முன்வரல் வேண்டும். நலம். நலம். ஓம் சிவம்.

உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே எமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்.

# திருவிசைப்பா

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

திருவிசைப்பா என்ற சொற்றொடரால் குறிக்கப்படுகின்ற தமிழ்த்திருமுறைகள் திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பது சைவப்பெரியாரால் பாடப்பெற்ற பாக்களுள் இப்பொழுதுள்ள 288 பாக்கள். இவ்வொன்பதின்மர் பாக்களும் அவர்களுள் ஒருவராகிய சேந்தனார் பாடிய திருப்பல்லாண்டு பதின்மூன்று பாக்களும் சேர்ந்த 301 பாக்கள் நம்பியாண்டார் நம்பிகளால் ஒன்பதாவது திருமுறையாகத் தொகுத்து வகுக்கப்பட்டுள்ளன.

திருவிசைப்பா என்ற சொற்றொடர் திரு, இசை, பா என்று மூன்று தமிழ்ச் சொற்களாலாயது. திரு=அருள், இசை=புகழ், பா=பாட்டு. இசைப்பா என்பது இறைவனது புகழைப்பற்றிப் பாடப்பட்ட பா என்று பொருள்படும். அப்பாட்டுகளை ஒன்பது பெரியார்களும் இறைவனது அருளிற் றோய்ந்தும் அவற்றை ஓதுவாரிடத்தில் இறைவனது அருள் விளங்கும்படிக்கும் பாடிய இசைப்பாட்டுகள் ஆதலின், அவை திரு இசைப்பா எனப்பட்டன. இப்பாட்டுக்களினது தொகுப்பு, அத்தொகுப்பினை உடைய நூலுக்கு அன்மொழித்தொகையாக ஆயது. இத்திருவிசைப்பாப்பாட்டு

களில் சில சிறப்புப் பாக்களுக்கு விரிவான உரை எழுத வேண்டுமென்று சைவ சித்தாந்த மகா சமாஜத்தார் எனக்கு ஆணை தந்தமையால், அவ்வாணையை மறுக்க அஞ்சித் திருவருளைத் துணைக்கொண்டு யான் உரை எழுதத்தொடங்குகின்றேன். இவ்வுரையை ஓதும் சைவ அன்பர்கள் தாங்கள் காணும்பிழைகளை எனக்கு ஏதுக்களுடன் தெரிவிப்பின் அவர்களுக்கு நான் நன்றிசெலுத்தக் கடப்பாடு உடையவனாவேன். சித்தாந்த உண்மைக்கு மாறான கருத்துப் பிழைகள் இருப்பின், அவை முதன்மையாய்க் கருதப்பட்டுக் களையப்படுதல் வேண்டும் என்பது எனது ஆவல்.

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே. க

(உரை) தெளி வளர் திரள் பளிங்கின் மணிக்குன்றே - (சுத்த மாயா தத்துவங்களில் ஒளிர்கிற ஒளியாய்) ஆதார ஞான யோகிகளது உள்ளத்தில் தெளிவு அறிவை விளங்கச்செய்து பெருக்குகின்ற உருண்டையான அழகிய பளிங்கு மலையே; ஒளிவளர் விளக்கே - நிராதார ஞான யோகிகளுடைய உள்ளத்தில் விளங்குகின்ற உயிர் அறிவொளியைப் பெருக்குகின்ற பேரொளியே; சூழ் உணர் கடந்தது ஓர் உணர்வே - வேறாகி நின்று சூழ்ந்து அறியும் சுட்டு அறிவுக்கு எட்டாது அதனைத் தாண்டி மெய் அறிவர்கள் (மெய்ஞ்ஞானிகள்) நின்னோடு இரண்டற (அத்துவிதமாய்க்) கலந்து நினது அருளால் அறியும் பேரறிவே; அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே - மெய் அன்பு மேலும் மேலும் பெருகுகின்ற யோகிகளுடைய உள்ளத்தில் இன்பமாய் உணரப்படுகின்ற தேன் கசிந்து வரும் பக்குவமுடைய பழமே; சித்தத்துள் தித்திக்கும் தேனே - மெய் அறிவர்களுடைய உள்ளத்தின் பேரின்பமாய் உணரப்படுகின்ற தேனே; உலப்பிலா ஒன்றே - (பிறப்பும்) இறப்புமில்லாத (என்றும் ஒருபடித்தான நிலையில் மெய் அறிவர்கள் உணரும் பேரின்ப உருவமுடைய) ஒப்பற்ற தனிப்பொருளே; அம்பலம் ஆடு அரங்காக - தில்லைப்

பொன்னம்பலமே கூத்தாடுகின்ற இடமாக நின்று; வெளி வளர் தெய்வக் கூத்து - (அன்பர்களுடைய உள்ளத்தில்) மெய் அறிவைப் பெருக்கும்படி ஞான நடனத்தை; உகந்தாயை - விரும்பிச் செய்கின்ற உன்னை; தொண்டனேன் - உன்னால் ஆண்டருளப் பட்டு உனக்கு மீளா அடிமைப் பட்டவனாகிய அடியேன்; விளம்புமா(று) விளம்பு - உனது நிலையான பண்பைப்பற்றி உலகிற்குச் சொல்லுகின்ற திறத்தை நீ என்னோடு உடனாய் எனது நாவில் உரையாடியாய் நின்று எனக்குச் சொல்லி அருள்வாயாக.

(விளக்கம்) இந்தப் பாட்டில் இறைவனுடைய ஞானநடனமும் அந்த ஞானநடனத்தால் அருள் அறிவு பெருகி வருகின்ற மெய் அன்பர்களது உள்ளத்தில் உண்டாகும் பயன்களும் சார்ந்தவண்ணம் ஆதற்றன்மையை உடைய அவ்வுயிர்கள் அப்பயன்களை அடைதற்கு வேண்டப்படும் இறைவனது உண்மை (சத்து)த் தன்மையும் அறிவு (சித்து)த் தன்மையும், இன்ப (ஆனந்த)த் தன்மையும் அறப் பட்டன. (1) தெளிவளர்திரள் மலைப்பளிங்கின் குன்றே, (2) ஒளி வளர்விளக்கே (3) சூழ்உணர் கடந்ததொரு உணர்வே என்பவைகளால் இறைவனிலும் உயிரிலும் மாயா உலகிலும் விளங்கும் மூன்று திறப்பட்ட அருள் ஒளியாற் பெறப்படும் உண்மைத் தன்மையும் (1) அளிவளர் உள்ளத்து ஆனந்தக்கனியே, (2) சித்தத்துட் டித்திக்கும் தேனே, என்பவைகளால் இறைவனிலும் உயிரிலும் விளங்கும் இருதிறப்பட்ட அருள் ஒளியாற் பெறப்படும் அறிவுத் தன்மையும், உவப்பிலா ஒன்றே என்பதனுல் இறைவனில் மாத்திரம் தனியாய் விளங்கும் இன்பத் தன்மையும் கூறப்பட்டன. உண்மைத் தன்மையானது இறைவன், உயிர், உலகம் (பதிபசுபாசம்) ஆகிய முப்பொருள்களுக்கும் பொது ஆதலால் மூன்று திறப்பட்டது. அறிவுத் தன்மை இறைவன், உயிர் இருபொருள்களுக்கும் பொது ஆதலின் இருதிறப் பட்டது. இன்பத்தன்மை இறைவனுகிய ஒரு பொருளுக்கே உரியது ஆதலின் ஒன்ருயது. இறைவனுடைய அருள்ஒளி மாயா தத்துவ உலகத்திலும் உடலிலும்ஆதார ஞானயோகிகளது உயிரிலும் விளங்குதலை திரள் மலைப்பளிங்கின் குன்றே என்றும், மலம் முற்றிலும் நீங்காது ஒருபுடை நீங்கி வருகின்ற ஞானயோக நிலையிலுள்ள உயிரில் விளங்குதலை ஒளிவளர் விளக்கே என்றும், மலம் முற்றிலும் நீங்கி மெய்யுணர்வு பெற்ற உயிரில் விளங்குதலை சூழ்உணர் கடந்ததோர் உணர்வே என்றும் ஆசிரியர் கூறி அருளினர். உலகிலும் உடலிலும் இறைவனது அருள் ஒளி விளங்குதல் உயிர் இன்பப் பயன் அடையும் பொருட்டேயாகும். மாயா தத்துவங்களுக்கு அருள்ஒளியால் யாதொரு பயனுமில்லை. மலம் முற்றிலும் நீங்காத ஞானயோக நிலையிலுள்ள (துரியநிலை) அன்பர் இறைவனுடைய பேரின்ப உணர்ச்சியை அளிவளருள்ளத்து ஆனந்தக்கனியே என்றும்,மலம் முற்றிலும்

நீங்கித் துரியாதீத நிலையின் கண்ணதாகிய மெய் அறிவர், பேரின்பம் உணர்தலை சித்தத்துள் தித்திக்கும் தேனே என்றும் ஆசிரியர் கூறினர். மாயைப்போல காரியப்பாட்டின்கண் நிலையாமையும் காரணப்பாட்டில் நிலைமையும் இன்றி, என்றும் நிலையாயுள்ள உண்மைத் தன்மையும் மலத்திஞல் நிறைவு அறிவு (வியாபக அறிவு) தடைப்பட்டிருக்கிற உயிர் மலம் நீங்கிய அளவில் அறிவும் அதுபற்றி அதற்குத் தக்க இன்பமும் மலம் நீங்கின உயிர்நிலையான பேரறிவும் அதுபற்றிப் பேரின்பமும் அடைதல்போல அன்றி எப்பொழுதும் ஒரு நிலையான பேரறிவும் பேரின்பமும் உடைய அறிவுத் தன்மையும் தன்னைச் சார்ந்த பேரின்பமடையும் மலம் முற்றிலும் நீங்கிய உயிர்போல அன்றி ஒரு பொருளையும் சாராது தன்னிலேதானே இன்ப உருவாயிருக்கும் இன்பத் தன்மையையும் இறைவன் உடையன் என்பதும் இதில் நாம் உய்த்துணரும்படியாக அவர் கூறி அருளினர். மலம் முற்றிலும் நீங்கிய உயிர் பேரறிவு அடைதலும் இறைவனைச் சார்ந்த பொருள்களை ஒன்றொன்ருய்ப் பார்த்து அறியும் அறிவன்றி இறைவனைப்போல் ஒரு பொருளையும் சாராது எல்லாப் பொருள்களையும் ஒரு சேர அறிந்தாங்கறியும் திறனுடையது அன்று என்ற உண்மையையும் நாம் மறக்கலாகாது. தெளிவளர் நிரல் பளிங்கின்குன்றே - எந்தப் பொருள் தன்னைச் சார்ந்திருக்குமோ அந்தப் பொருளினது நிறத்தைக் காட்டுதல் பளிங்கின் தன்மைபோல, மண் முதல் நாதம் வரையுள்ள தத்துவங்களில் எந்தத் தத்துவத்தை உயிர் சாருமோ அந்தத் தத்துவத்தின் தன்மையாய் உயிர் விளங்குதலால் பளிங்கு தத்துவங்களுக்கு உவமையாகக் கூறப்பட்டது. தத்துவங்களில் மயக்க அறிவை (அவிச்சையைச்) செய்கின்ற அசுத்தமாயா தத்துவங்கள்போல அன்றி, சுத்தமாயா தத்துவங்கள் தெளிவு அறிவாகத் தம்மிடம் விளங்கும் அருட்பேரொளியை உயிருக்கு விளங்கச் செய்தலால் சுத்தமாயா தத்துவங்களில் விளங்குகிற தெளிவு அறிவு என உரை கூறப்பட்டது. தெளிவு என்பது அசுத்தமாயை, பிரகிருதிமாயைகளுக்கு உரிய மயக்கத்தினின்றும் தெளிந்த அறிவு உலகத்தை மெய்யென்று நோக்காது சிவத்தை மெய்யென்று நோக்கும் அறிவு இறைவனைப் பளிங்கின்மலைக்கு உவமித்ததனுல்,ஞாயிற்றினொளி பளிங்கில் விளங்கி அதனைச் சார்ந்த பொருளில் விளங்குதல்போல, மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களையும் குறிகளாக வைத்து யோகம் செய்யும் ஆதாரஞான யோகிகளுடைய உள்ளத்தில் இறைவனுடைய அருட்பேரொளி அவ்வாதாரங்கள் வழியாய் விளங்குகிறது என்பது பெறப்படுகின்றது. இறைவனுடைய அருட்பேரொளியானது, ஆதாரயோகிகளுடைய உள்ளத்தில் ஆறு ஆதாரங்கள் மூலமாய்த்தெளிவு அறிவை அவர்களுடைய யோகப்பயிற்சிக்குத்தக்க அளவிலே பெருக்குதலால்

தெளி வளர் பளிங்குக்குன்றே என்றார். வளர் என்பது பெருக்கு என்ற பிறவினைப் பொருளில் வந்தது. ஒளிவளர் விளக்கே-விளக்கு= விளக்கும் ஒளிப்பிழம்பு. அஃது இங்கே இறைவனது அருட்பேரொளிப்பிழம்பைக் குறிக்கிறது. அந்த அருட்பேரொளியானது நிராதார ஞானயோகிகளது உயிர் ஒளியை அவர்களது உள்ளத்தில் அவர்கள் யோகப் பயிற்சிக்குத் தக்கவாறு மேலும் மேலும் பெருக்கி மெய் அறிவை விளங்கச் செய்தலால் ஒளிவளர் விளக்கே என்றார். வளர் - பிறவினைப் பொருளில் வந்தது. சூழ் உணர்வு கடந்தது ஓர் உணர்வு- சூழ் - சூழ்தல், ஆராய்தல், கருதல் - முதனிலைத் தொழிற்பெயர். சூழ் உணர்வு கருதி ஆராய்தலாற் பெறப்படும் சுட்டறிவு. இறைவன் இந்தச் சுட்டறிவால் அறியப்படாதவனாய், அதனைக் கடந்து நிற்றலால் கடந்ததோர் உணர்வே என்றார். ஓர் உணர்வு என்பது ஒப்பற்ற பேரறிவு. இறைவனது பேரறிவுக்கு முற்றிலும் மலம் நீங்கிய உயிரினது அறிவும் ஒப்பாதலின்மையால் ஓர் உணர்வே என்றார். இரண்டாவது உணர்வு, மலம் நீங்கும் உயிர்கள் இறைவனோடு அத்துவிதமாய் ஒன்றி நின்று அறியும் பேரறிவைக் குறிக்கிறது. கருதல் அறிவால் பெறப்படும் சுட்டறிவுக்கு எட்டாது அருள் அறிவாற் பெறப்படும் பேரறிவுக்கு எட்டும் பொருளே என்பது பொருள். உயிர்களுடைய பக்குவத்திற்குத் தக்கவாறு இறைவனது அருள்ஒளி மாயா தத்துவங்கள் மூலமாய் உயிரில் விளங்குதலைத் தெளிவளர் பளிங்கின் குன்றே என்றும், மாயையைக் கடந்த உயிரில் நேரே விளங்குதலை ஒளிவளர் விளக்கே என்றும், இறைவனிடம் தனியே விளங்குதலைச் சூழ் உணர்வுகடந்ததோர் உணர்வே என்றும் ஆசிரியர் கூறினார். அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே - அளி என்பது பேரன்பு (Impersonal love). வளர் இங்கே பிறவினைப் பொருளில் வந்தது. ஆனந்தக் கனி என்பது ஆனந்தமாகிய கனி. இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஆனந்தக்கனி என்பது அருள் விளக்கத்தால் ஞான யோகிகளுக்குத் துரிய நிலையின்கண் உண்டாகும் இன்பத் தோற்றத்தை (சுகப்பிரபையை)க் குறிக்கிறது. இது சிவஞான போதம் பத்தாம் சூத்திரத்தில் கூறப்படுகிறது. சித்தத்துள் தித்திக்கும் தேன் - தித்திக்கும் தேன் என்பது நிருவிகற்ப சமாதியில் இருக்கும் ஞானிகளுக்குத் துரியாதீத நிலையின்கண் உண்டாகும் பேரின்ப விளக்கத்தைக் குறிக்கிறது. இது சிவஞானபோதம் பதினொன்றாம் சூத்திரத்தில் கூறப்படுகின்றது. உலப்பிலா ஒன்றே - இறைவனுக்கு இன்ப உருவம் தனியே உரியது. ஆதலின், 'ஒன்றே' என்றார். அதனால் ஒன்று என்ற சொல் இறைவனுடைய பெயராக சைவசமய நூல்களில் கூறப்படுகின்றது. மாணிக்கவாசக அடிகள் 'உலப்பிலா ஆனந்தமாய தேன்' எனக் கூறியிருத்தல காண்க. அம்பலம் ஆடு அரங்கு ஆடி - இறைவன் நடனம் ஆடும் இடம் புறத்தில்

சிதம்பரமாகவும் அகத்தில் உயிர்களது உள்ளத் தாமரையாகவும் உள்ளது. உயிர்களது உள்ளத்தில் இறைவன் செய்யும் நடனத்தால் அவைகளுடைய பண்பு விளங்கித் திருத்தம் அடைகிறது. "தில்லை மூதூர் ஆடிய திருவடி - பல்லுயி ரெல்லாம் பயின்றன ளுகி - எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி" என மாணிக்கவாசக அடிகள் கீர்த்தித் திரு அகவலிற் கூறிஅருளினமை காண்க. வெளிவளர் தெய்வக் கூத்து உகந்தாயை - வெளி என்பது பராசக்தியாகிய அருட்சக்தி விளங்கும் சிற்றம்பலம் (ஞானகாசம்). அஃது இங்கே அவ்வருளாகிய மெய் அறிவைக் குறிக்கிறது. வளர்தல் - பெருக்குதல். பிறவினைப் பொருளில் வந்தது. தெய்வக் கூத்து - ஞானக் கூத்து. ஞான நடனம், ஊன நடனம்போல் உயிர்களுக்கு மறைத்தலைச் செய்யாமல் மறைப்பை நீக்கி அருள் விளக்குதலால் 'தெய்வக் கூத்து' என்ருர். உகந்தாயை - இறைவன் ஐந்தொழில் காரணமாகக் கூத்தினை உயிர்கள்மாட்டு வைத்த பேரருளால் தானே மகிழ்ந்து செய்தலால் கூத்தச் செய்தாயை என்று கூருது உகந்தாயை என்று கூறினர். விளம்புமா விளம்பே - விளம்புதலாவது ஆசிரியர் தாம் இறைவனேடு இரண்டறக் கலந்து தமது சிவமாம் தன்மையாய தூய உள்ளத்தில் உணரும் சிவபோகப் பேரின்ப உணர்ச்சியால் எழுகின்ற இறைவனுடைய பொருள்சேர் புகழை விரும்பிச் சொல்லுதலாகும். துரியாதீத நிலையில் சிவபோகத்தை உணர்தலுக்கு இறைவன் மலம் நீங்கின உயிர் உடனாய் நின்று உணர்தலும் உணர்ந்ததை உரைத்தலுக்கு அவன் அதன் நாவில் உரையாடியாய் நின்று உரைத்தலும் இன்றியமையாது வேண்டப்படுவன ஆதலின், விளம்புமா விளம்பு என்ருர். இவ்வாறு இறைவன் உயிருக்குக் கட்டு நிலையிலன்றி வீட்டு நிலையிலும் செய்துவரும் உதவி, காணும் உதவி என்று கூறப்படும். இதனைக் காரைக்கால் அம்மையார் தமது அற்புதத் திருவந்தாதியில் "அறிவாய் அறிகின்ருன் தானே" என்று கூறி அருளினர். விளம்புமாறு என்பது விளம்புமா எனத் தொக்கி நின்றது.



---

# அப்பரது கடவுட் கொள்கை

[பே. கோவிந்த மூப்பனர், கொடுமுடி]

(மலர் - ௬, இதழ் - ௧௧, ௨௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)

"கால்கொடுத் திருகை ஏற்றிக் கழிநிறைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிர நீரால் சுவரெடுத் திரண்டு வாசல்
எல்வு டைத்தா அமைத்தங் கேழு சாலேகம் வைத்து
மால்கொடுத் தாவி வைத்தார் மாமறைக் காடனூரே"

உடம்பையும் உறுப்புக்களையும் கடவுள் உயிர்க்குக் கொடுத்தது, உயிர் தனது மலத்தை நீக்கி வீடுபேறடைதற் பொருட்டாதலின், அக்கொள்கையை மறந்து உலக இன்ப துன்பங்களை நுகர்ந்து காலங் கழிப்பது தவறு என்று அடிகள் கருதுகிறார். உலகவாழ்க்கை, யான் என்னும் அகப்பற்றோடும், எனது என்னும் புறப்பற்றோடும் வாழும் வாழ்க்கை. ஒருவன் தனக்கும் தனது தாய் தந்தை மனைவி மக்கள் முதலியோர்களுக்கும் நோய் முதலியவற்றால் துன்பம் நேருங் காலத்தில் துன்பமுறுகிறான். தனக்குத் துன்பமுள்ள காலத்தில் தனது தாய் தந்தை மனைவி மக்கள் முதலியோர்களுக்கு இன்பம் நேரின் தான் இன்புறுதலில்லை. தனது தாய் தந்தை மனைவி மக்கள் முதலியோர்களுக்குத் துன்பமுள்ள காலத்தில் தனக்கு இன்பம் நேரிடின் அதனைத் தான் மறைத்துக் கொள்ளுகிறான். இவ்வாறாக ஒருவன் பெருவரவிற்றாகிய துன்பத்தையும் சிறுவரவிற்றாகிய இன்பத்தையுமே தன் வாழ்க்கையில் அடைகிறான்.

"பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு"

என்று திருவள்ளுவர் கூறுவதையும் நோக்குக.

வாழ்க்கையில் அகப்பற்றோடும் புறப்பற்றோடும் செய்யும் செயல்கள் தன்னலம் கருதிச் செய்யப்படுவனவாதலின், தன்னலத்திற்காக நடுவு நிலைமையின்றி மிகுதியும் அறமல்லாதனவே செய்யப்படுகின்றன. "மண்ணுளே திரியும் போது வருவன பலவும் குற்றம்" என்று நாயனர் அருளிச் செய்கிறார். உலக வாழ்க்கையில் சிறு வரவிற்றாகிய இன்பத்தையும் பெருவரவிற்றாகிய துன்பத்தையும் துய்த்தும், சிலவாகிய அறத்தையும் பலவாகிய அறமல்லனவற்றையும்

செய்ய நேர்தலின் உலக வாழ்க்கையை அடிகள் வெறுக்கிறார். தீ பற்றுக்கோடின்றி நில்லாதவாறுபோல மனமும் பற்றுக் கோடின்றி நில்லாதாகலின் உலகப் பொருளைப்பற்றி நின்ற மனத்திற்குக் கடவுட் பொருளைப் பற்றுமாறு அறிவுறுத்து கிறார். மனம் நினைத்தபடி மற்ற உறுப்புகள் செயலாற்ற வேண்டுமாதலின், ஒவ்வொரு உறுப்புக்கும் அததற்குரிய செயலைக்கடவுளைக் குறித்துச் செய்யுமாறு கட்டளையிடுகிறார்.

" மனைவிதாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும்
வினையுளே விழுந்தழுந்தி வேதனைக் கிடமாகாதே
கனையுமா கடல்சூழ் நாகை மன்னு காரோணத்தானை
நினையுமா வல்லீராகில் உய்யலாம் நெஞ்சினீரே "

என்பதனு லறிக. ஒவ்வொரு உறுப்புக்கும் கடவுளைக் குறித்துத் தொழில் செய்யுமாறு கட்டளையிடுவதைத் திரு அங்கமாலையிற் காண்க.

அடிகள் தம்மனத்தையும், மனத்தால் நினைத்தபடி தொழில்செய்யும் உறுப்புகளையும் அகப்பற்ரேடும் புறப் பற்ரேடும் செய்யும் உலக வாழ்க்கைக்கு வேண்டிய செயல் களைஎண்ணவிடாமலும் செய்யவிடாமலும் தடுத்து இருபற்று மின்றி இறைவனைக்குறித்து எண்ணவும் தொழில் செய்யவும் பழகி, அப்பழக்கத்தால் முன்போலவே பெருவாவிற்ருகிய துன்பம் எய்துதலின்றி, பெருவரவிற்ருகிய இன்பம் எய்துத லறிந்து, இறைவனைக்குறித்து எண்ணுமலும் தொண்டு செய் யாமலுமிருந்த மனத்தையும், மற்ற வுறுப்புக்களையும் எண் ணுமலும் தொண்டு செய்யாமலும் கழித்த காலத்தையும் எண்ணி எண்ணிக்கழிவிரக்கம் கொள்கிறார். நாயனர் தம் குழ விப் பருவத்தையும் இளமைப் பருவத்தையும் முதுமையின் முற்பகுதியையும் கழித்து முதுமைப் பருவத்தின் பிற்பகுதி யில் சைவசமயம் புக்குச் சிவபெருமானை வழிபட்டு இன்புற்ற வராதலின், சிவபெருமானை வழிபட்டு இன்புற்றகாலமே தம் கடமையைச் செய்து பயன்பெற்ற காலம் என்றும், கவலை யின்றி, வஞ்சகமின்றிப்பெற்ருரோடும் உற்ருரோடும்,நண்பர் களோடும் பகைவர்களோடும்உரையாடியும்விளையாடியும் உண் டும் கண்டும் இன்புற்றுக்கழித்த குழவிப் பருவக் காலமும், கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலன்களையும்

ஒருங்கே துய்த்தற்குரிய மனைவியோடு இன்புற்றுக்கழித்த இளமைப் பருவக் காலமும் நரைதிரை மூப்பினால் செய்வன செய்யாது, மாணுக்கர்களோ மக்கள்போன்ற சுற்றத்தினரோ சொன்னவற்றைக்கேட்டும், செய்தவற்றைப் பார்த்தும் இன் புற்றுக் கழித்த முதுமைப் பருவக்காலமும், தம் கடமை யைச் செய்யாது பயனிழந்த காலம் என்றும், தம் கடமை யைச் செய்யாது பயனிழந்த காலம் தம் வாழ்க்கைக்கு வந்து கழிந்தனவாயினும், அவை தாம் பிறப்பதற்குமுன் வந்த காலத்தைப் போலவும், தாம் இறப்பதற்குப் பின்வரும் காலத்தைப்போலவும் தம் வாழ்க்கைக்கு வராத காலம் என் றும் பல இடங்களிற் கூறுகின்றார். அன்றியும் சமணசமயஞ் சார்ந்து, கடவுளைவணங்கிக் கழித்தகாலமும் தம் கடமையைச் செய்யாது பயனிழந்த காலம் என்று நாயனார் எண்ணுகிறார்.

"யாதோர் தேவரெனப் படுவார்க் கெலாம்
மாதேவ னலால் தேவர் மற்றில்லையே"

என்று நாயனார் கூறுகின்றாராயினும், சிவபெருமானை வண ங்குதற்குச் சமண சமயம் நேர்முறை யன்மையாலும் அச் சமயக் கடவுளது வணக்கத்தால் பயன் பெறுமையாலும் அவ்வாறு எண்ணுகின்றார் போலும்.

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே"

"பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொரு மூப்பு வந்து
கோலனாய்க் கழிந்த நாளும் குறிக்கோ ளிலாது கெட்டேன்
சேலுலாம் பழன வேலித் திருக்கொண் டீச்சுரத் துளானே"

"பெரியானைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

"தத்துவனைத் தலையாலங் காடன் தன்னைச்
சாராதே சாலநாட் போக்கி னேனே"

"பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம்
சொல்லிய செலவு செய்தேன்"

என்று கூறுதல் காண்க.

திருநாவுக்கரசு நாயனர் தம் வாழ்க்கையிற் பெரும் பகுதியைப் பயனின்றிக் கழித்ததற்குக் கழிவிரக்கம் கொள்ளுதலை முன்னர் அறிந்தோம். எஞ்சிய சிறு பகுதியைச் சிவபெருமானை வணங்கிப் பயன் பெற்றுக் கழித்ததற்குக் கரைகடந்த இன்பம் அடைகிறார் என்று பின்வருஞ் செய்யுள்களா லறியலாம்.

"எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்தமில் புகழ் ஆரூர் அரனெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துள்ளும் தங்கவே"

"என்ன மாதவம் செய்தனை நெஞ்சமே
மின்னு வார்சடை வேத விழுப்பொருள்
செந்நெல் வார்வயல் சேறையுட் செந்நெறி
மன்னு சோதிநம் பால்வந்து வைகவே"

உலகம், உயிர், கடவுள் என்ற முப்பொருள்களுள் உலகம் அறிவில்லாதது உயிர் சிற்றறிவுடையது; கடவுள் முற்றறிவுடையது; முற்றறிவுடைய கடவுள் உயிரிடத்துள்ள பேரருளால் சிற்றறிவுடைய உயிரைத் தன்னைப்போல முற்றறிவுடையதாக ஆக்க அதனைத் தொழிற்படுத்துகிறது. உயிர் தொழிற்படுவதற்கு உலகம் கருவியாகத் தொழிற்படுகிறது. உலகத்திற்கு அறிவின்மையாலும், உயிர்க்குச் சிற்றறிவுடைமையாலும், அவை தாமாக இயங்குதலில்லை. உடம்பு அறிவில்லாத பொருள்; உயிரில்லாத உடம்பு தானாக இயங்குதலில்லை; உயிருடைய உடம்பே இயங்கக் காண்கிறோம். உயிர்தொழிற்படுத்த உடம்பு தொழிற்படுகிறது. கண் காணும் அறிவுடையது. அது, காணும் அறிவுடையதாயிருப்பினும் மனம் தொழிற்படுத்தாவிடில் கண் ஒன்றனைக்காணாது. அதுபோல உயிர் அறிவுடையதாயிருப்பினும் தானே தொழிலியற்றுதலில்லை; கடவுள் தொழிற்படுத்தவே உயிர்தொழிற்படுகிறது. உடம்பை இயக்குவது உயிராதல்போல, உயிரையியக்குவது கடவுளாதல்பற்றிக் கடவுளுக்கு உயிர்க்குயிர் என்ற பெயர் வழங்கப்படுதல் காண்க. இயவுள் என்ற பெயரும் இப்பொருளுடையது. (தொடரும்)

உ

சிவமயம்

## காவை - அம்பலவாணத் தம்பிரான்

இயற்றிய

# பிராசாத அகவல்

## உரையுடன்

திருவரு ளாலே யிருநிலம் வாழ்க[1]வந்*
தருந்தவ முனிவன் பொருந்திய பொதியமும்[2]

---

செல்வமிகுந் தில்லைந[ா]தர்த் தென்வீதி யிற்சிறப்பா
யெல்லவரும் போற்ற இனிதிருக்கும்—கல்லாரத்
தொந்திவயிற் றந்திநிறத் தும்பிமுகத் துங்கமறுப்
பைந்துகரத் தானைநினைந் தால்.

[1]திருவருளாலே இருநிலம் வாழ்க - சிவனது திருவுளத்தினாலே பெரிய நிலத்துண்டாகிய பார்ப்பாரும் பசுவு மிராசாவும் வாழ்க; 'கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மறையும் நாடு மென்ப' என்றார் தொல்காப்பியனார். 'வாழ்த்தும் வணக்கமும் எற் புடைத்தாகி' என்பதனால் முதற்கண் வாழ்த்துக் கூறியது. 'வாழ்க அந்தணர் வானவர்...........துயர் தீர்கவே'† என்பதுவும் இக்கருத் தைப்பற்றி வந்ததெனவறிக.

[2]வந்தரு.....பொதியமும் - சிவபெருமான் இமவான் மகளைக் கலியாணஞ் செய்யும்பொழுது தேவர்களெல்லோரும் திருக் கலியாணஞ் சேவிக்கப் போகையால், வடபூமி தாழ்ந்து தென்பூமி உயர்ந்ததுகண்டு, தேவர்களெல்லோருந் தோத்திரஞ்செய்து வேண்ட, அப்பொழுது சிவனும் அரிய தவத்தினையுடைய அகத்தியமா முனியை வாவென்றழைத்து, 'நீபோனா லந்தப் பூமி சமமா' மென்று திருவுளஞ்செய்ய, அவரும் 'திருக்கலியாணஞ் சேவியாமல் நான் போகிறதெப்படி' என்று விண்ணப்பஞ் செய்ய, 'உனக்கு நாம்

---

*வாழவந் தென்றும்பாடம். †தேவாரம், ஞான. திருப்பாசுரம், 1.

துய்யமுத் தமிழ்சேர் வையைமா நதியுங்[3]
குன்ற மெறிந்த வென்றி வேலன்
போற்றிவா னவர்தொழ வீற்றினி திருக்கும்
மன்றலஞ் சோலைக் குன்றநன் னாடும்[4]
பூவலர் வாவிக் காவையம் பதியும்[5]
வளந்திகழ் திசையுடன் விளங்க வந்தோன்[6]
அம்புவி புகழ்திரு வம்பல நாதன்[7]

---

இந்த மணவாளக் கோலமாம்படியே பாவநாசத்திற் சித்திர சபையில் வந்து காட்டுகிறோ'மென் றனுப்ப, அவரும் தென்றிசை நோக்கிப் புறப்பட்டுத் திருப்படை வீடெல்லா மடைவே சேவித்துத் திருக்குற்றாலமே வந்து சித்திரசபையிற் றிருநடனம் தெரிசித்துப் பாவநாசமே வந்து சிவனை அர்ச்சித்தவாறே பூமியையுஞ் சமதலமாக்கி, அங்கே தவம்பண்ணியிருந்த அந்தநாளிற் றிருக்கலியாண சீர்த்தியையுந் தண்டன்பண்ணிய முனிவன் தனதாசிரமமாகப் பண்ணிக்கொண் டிருக்கும் அப்பொதியமா மலையும்;

[3]துய்ய முத்தமிழ் சேர் வைகைமா நதியும் - இயலிசை நாடகமாகிய முத்தமிழினையுடைய கடைச்சங்கமாகிய திருவாலவாயில் மும்மூலைத் தாடகையார் திருக்கலியாணத்திற் குண்டோதரனென்னுங் கணநாதர் நிமித்தமாக அழைப்பித்த பெரிய வைகையாற்றினையும்;

[4]குன்றமெறிந்த......குன்றநன்னாடும் - கிரவுஞ்சமென்னு மலையைப் பிளந்த வெற்றிப்பாட்டினையுடைய குமாரசுவாமியைத் தேவர்கள் தோத்திரஞ் செய்து வழிபட, சிங்காதனத்தி லெழுந்தருளியிருக்கும் மணம் பொருந்திய சோலையும் சரவணமும் பொருந்திய திருப்பரங்குன்றினைச் சூழாநின்ற நல்ல நாட்டினையும்;

[5]பூவலர்...பதியும் - தாமரைப்பூ அலராநின்ற வாவியினையுடைய காவையெனப் பெயர் வழங்கிய திருப்படை வீடும்.

[6]வளர்...வந்தோன் - வளப்பத்தைத் தாராநின்ற பத்துத் திக்கினும் இனிய சொல்லுடன் எங்குஞ் சீர்த்தி பிரகாசியாநின்றோன்;

[7]அம்புவி......நாதன் - அழகிய புவியின்கண் எல்லோராலுந் தோத்திரஞ் செய்யப்படாநின்ற திருஅம்பலவாணனென்னும் பிள்ளைத் திருநாமத்தையுடைய ஆசாரியன்;

சிவனரு ளாலருள் திருமந் திரத்தை[8]த்
தவநெறி யொழுகுந் தக்கோர்க் குரைத்தனன்[9]

---

[8]சிவ.........மந்திரத்தை - சிவன்றனது கிருபையினலருளிச் செய்த திவ்யாகமங்களுட் காமிக முதலிய ஒன்பதாகமத்தையும் திருமூலதேவ நாயனர் அது குறித்து அருளிச்செய்த திருமந்திர மாலையையும் உற்று நோக்கி ; காமிக முதலிய ஒன்பதாவன :

"பெற்றநல் லாகமங் காரணங் காமிக
முற்றநல் வீரம் சிறந்தமெய் வாதுளம்
மற்றநல் வியாமள மன்னுகா லோத்தரஞ்
சுத்தநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே." [திருமந். 63.]

எனத் திருமந்திரத்திற் கூறினர். அதற்குத் திருமந்திரமென்னும் பெயர்க் காரண மெத்தாலென்னில்,

"நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப." [தொல். பொருள். 481.]

என்றார் தொல்காப்பியனாராதலானும், திருமந்திரம் எனப் பெயராயிற்று. எனவே, இதற்கு முன்னூலின் [பெயர்] யாதென்னில்: சித்தாந்த சைவமெனவும் தெக்ஷிண சைவமெனவும் வாமசைவமெனவும் சைவம் மூன்றுவிதப்படும். இம்மூவகைக்கு மாகமம் யாதென்னில் காமிகாதி வாதுளாந்தஞ் சித்தாந்த சைவ சாத்திரமெனப் பெறும். சச்சந்த லளிதாதி தெக்ஷிண சைவ சாத்திரமெனப் பெறும். மூலதந்திராவதாராதி வாம சைவமெனப்பெறும். ஆதலால் இந்த மூலதந்திராவதாரமே திருமந்திரத்துக்கு முன்னூலெனப் பெறும். அத்திருமந்திரம் வழிநூலெனப் பெறும். இவ்வாசிரியர் இவ்விரண்டினையும் உற்று நோக்கிச் சார்பு நூலாக இந்நூலை அருளிச் செய்தார். இந்நூல் யாவர்க்குரைத்தனரென்னில்,

[9]தவ.........த்தனன் - பூமியின்கண் அரிய தவசினைப்பண்ணி யோகபாதத்தின்வழி நாடோறும் அனுட்டித் தொழுகும் ஞாதாக்களுக் குரைத்தனர். எனவே பாயிரங் கூறியதாயிற்று. அஃதெக் காரணத்தாலென்னில்,

'ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே' [நன்னூல். 46.]

என்னும் இலக்கணத்தால் இதனை யாக்கியோன் பெயர் - திருவம்பலவாணன் ; வழி - திருமந்திரத்தின் வழி ; எல்லை - மதுரை மண்டல

போற்றிய தலைமை நாற்சது ரத்து
ளோங்கா ரஞ்சேர் ரீங்கா ரத்து
மூலை, இரண்டினுஞ் சாலத் தோன்றி[10]
யிடைபிங் கலைக ளிடம்வல நிற்கு[11]
மேலை மூலை மூல மாகச்[12]
சுழுமுனை* சித்திரம் வழுவில் வச்சிர
மொன்றுக் கொன்று சென்றுள் ளாகி[13]
யுரைசெய் கோணத் தொருதலை சொருகி[14]
யிருதலை திரண்ட வொருவேய் போலக்
கோணற நிற்கும் வீணா தண்டி
னூடே யூடி[15] நாடி மூன்றும்

---

மென்னும் பதி; நூற் பெயர் - பிராஸாத அகவல்; யாப்பு - அகவற்பா; நுதலிய பொருள் - கலைகளின் முறைமையும், மேதைகலை, அர்க்கீசகலை முதலிய கலைகளினுடைய பிராசாத வியல்பும்; கேட்போராவார்—மாணாக்கருட் டக்கோர்; பயன் - வீடுபேறு. இவைகளாற் பாயிரங் கூறியதாயிற்று. இங்ஙனம் பாயிரத்தின் முறைமையை யுணர்த்தி சோடச [கலா] பிராசாதத்தினுள் தலைமையாகிய நாடிகளின் முறைமை யுணர்த்திற்று.

[10]போற்றி...தோன்றி - பஞ்சபூதத்தினுட் டலைமையாகிய பூமி நாற்கோண வடிவாதலின், அதன்மேலே மூலாதாரத்துக்கு வடிவாகிய முக்கோணத்தினுள் தாழ்ந்த மூலைகளினிரண்டனுள் ஹோங்காரமும் ஹ்ரீங்காரமும் ஆகி இரண்டுந் தோன்றி;

[11]இடை...நிற்கும்-ஹோங்கார மிடமாக இடையும் ஹ்ரீங்காரம் வலமாகப் பிங்கலையுந் தோன்றி மேலே செல்லும்;

[12]மேலை...மாக - அக்கினி சிகை போன்றிருக்கிற மேலாகிய கோணமே யடியாக;

[13]சுழு...ளாகி - சுழுமுனா நாடியும் சித்திர நாடியும் அதனை வழுவுதலில்லாத வச்சிர நாடியும் ஒவ்வொன்றும் ஒரு நாடிக்குள் ளொருநாடி யுள்ளேயாகி;

[14]உரை...சொருகி - முற்கூறிய மூலாதாரத்து நுனிக்கோணத்திலே சுழுமுனை யடியாகி;

[15]இருதலை...யூடி - வீணாதண்டானது இரண்டு தலையுந் திரண்ட மூங்கிற் குழல்போல வளைவின்றி நேரே நிற்க வீணாதண்டின் நடுவே யாயிரகோடி மின்னிறம் போன்று தாமரை நூலானது

---

பி - ம்—*சுழுனை.

பிரம ரந்திர முருவி நிற்கும்[16]
இடைபிங் கலைகண் நடுவுதண் டுடனே
தொடர்வறப் பின்னி யடைவா தார
மாறினுங் கூடி வேறுவே றாகிப்
புருவ மத்திம மருவி நாசிக்
கிடமும் வலமு மிடமென நிற்கும்[17]
முந்தியந் தாமரைக் கந்த மேவி[18]

---

துவாரத்தினின்றும் புறப்படுவதுபோல வீணாதண்டிற் றுவாரத்தைப் பொருந்தி ;

[16]நாடி...நிற்கும் - முற்கூறிய சுழுமுனைநாடியும் சித்திராநாடியும் வச்சிரநாடியுமாகிய மூன்றும் பிரமரந்திரமளவாகப்பொருந்தி நிற்கும்; இங்ஙனம் சுழுமுனையின் முறைமைகூறி, மேல் இடைபிங்கலைகளின் போக்குவரத்தும் முறைமையும் உணர்த்தினர்.

[17]இடை...நிற்கும் - முற்கூறிய இடை பிங்கலைகளிரண்டும் தனித்தனியாய் வீணாதண்டினுடனே கூடி மாறினும் அடைவே கத்தரிகைக் கால்போலக் கூடிக் கூடிப் பிரிந்து அதினின்றும் பிரம ரந்திர மளவுஞ் சென்று பின்பு புருவ மத்திமத்தை வந்து பொருந்தி யுச்சுவாச நிச்சுவாசத்துக் கிடமாய் நிற்கும் ;

உடையவன் பாரித்த வொண்பொருள் மூன்று
மிடையொன்று மிரண்டு மியக்கறுங் காலம்
இடைநின்ற வாதார மேழு மழிய
இடைநின் றுளானங்கு மெய்நின்ற வாறே.*

இம்மந்திரத்துள் மூன்று மென்றது சித்திராநாடி, வச்சிரநாடி, சுழுமுனை நாடிகளே. இரண்டு என்றது இடைபிங்கலைக ளிரண்டாகும் உச்சுவாசம் நிச்சுவாசம். ஆலம் வித்திற் சாகோபசாகை அடங்கித் தோன்றுமாறுபோலச் சுழுமுனை முதலிய வைந்தினுள் எல்லாம் அடங்கி விரிந்து காரியப்படும். அஃதெங்ஙன மென்னில்,

[18]உந்தி......மேவி - குண்டலி ஸ்தானமாகிய உந்தியில் ஒன்பதங்குலத்தையுடைய மாணிக்க நிறம் போன்ற தாமரைக் கிழங்கைச் சுழுமுனைபொருந்திய அல்லிக்கிழங்கானது கிழங்கொன்றாய்க் கொடி பலவாய்ப் புறப்படுமாறுபோல எழுபத்தீராயிர நாடிகளும் நீரிற் கிடந்து சீரணமான வரை சிலையினரம்புபோல நாடிகள் சரீரமெங்கும் வியாபித்து நிற்கும். நாடிகளின்வித்தி யறியுமிடத்து, விரிவில் இருபத்தெட்டுக் கோடியாம். வகையில் எழுபத்தீராயிர நாடிகளாம்.

---

*இந்தச் செய்யுள் அச்சிட்ட திருமந்திரப் பிரதிகளிற் காணப் படவில்லை.

30 இடையினுங் கலையினு மெழுந்தைந்து நாடி
இடமு வலமு நடுவு மேல்போய்க்
கண்வாய் செவியென கண்ணி நிற்கு[19]

தொகையில் முப்பத்திரண்டு நாடிகளாம். இதிற் சிறப்பு பத்து நாடிகளாம். அதிற் சிறப்பு மூன்று நாடிகளாம். அது தன்னிலும் சிறப்பொன்றென அறிக. முப்பத்திரண்டு நாடிகளாவன: 1. இடை, 2. பிங்கலை, 3. சுழுமுனை, 4. காந்தாரி, 5. அத்தி, 6 சிங்குவை. 7. பூடா, 8. எச்சுவினி, 9. அலம்புஷை, 10. குகு, 11. சங்கினி, 12. வாவினி, 13. இலாகினி, 14. மோகினி, 15. கம்பினி, 16. மேதினி, 17. விகுருதி, 18. விஷமா. 19. மானினி, 20. அங்கினி, 21. விசுவமாவினி, 22. சேகனி, 23. கோஷினி. 24. தேசினி, 25. இராசவாசினி, 26. வாகினி, 27. தாணி, 28. இராசபோசினி, 29. இராசக்கினி, 30. சிதவீரியை, 31. உஷ்ண வீரியை, 32. பரிசனுவசிகா எனக் கூறிய முப்பத்திரண்டுக்குந் தானமுந் தொழிலும் மேல் விரித்துணர்த்துதும். இந்நூலுட் சுருக்கிக் கூறியது இடை முதலிய பத்து நாடியுமென வறிக.

[19]இடை......நிற்கும் - இங்ஙனம் கூறிய நாடிகளின் வியாபாரத்தை யறியுமிடத்து உந்திக் கமலத்தினின்று இடை பிங்கலை சுழுமுனையி[னின்று] மவ்வைந்து நாடியாகப் புறப்பட்டு இடது கையினும் வலது கையினும் கண்முதலிய தானங்களினும் பொருந்தி நிற்கும். அவை வருமாறு :—இடையினின்றும் தேகனி, தோஷனி, தேசனி, இராசவாகினி, வாகினி என்னும் நாடிகளைந்தும் இதயத்தினின்று மேலே புறப்பட்டுக் கண்டத்தைப் பொருந்திப் பின்பு கக்ஷத்தின்கண் வந்து இடதுவாகுவை யடைந்து முழங்கை மணிபெந்தம், அங்குலிகளைந்தினும் பொருந்தி நிற்கும். பிங்கலையினின்றும், தாணி, இராசபோசினி, சங்கிரியை, சிதவீரியை, உஷ்ணவீரியை என்னும் நாடிகளைந்தும் இதயத்தினின்றும் மேலே புறப்பட்டுக் கண்டத்தைப் பொருந்திப் பின்பு கக்ஷத்தின்கண் வந்து வலது வாகுவை யடைந்து முழங்கை, மணிபெந்தம், அங்குலிகளைந்தினும் பொருந்தி நிற்கும். காந்தாரி என்னும் நாடி சுழுமுனையினின்றும் புறப்பட்டு இதயம், கண்டம், தாலு, புருவமத்திமத்தைப் பொருந்திப் பின்பு கண்டத்திலிறங்கித் தலையிற் சென்று வலதுகண்ணிடமாயிருந்து பார்க்கும். அத்தியென்ற நாடி சுழுமுனையினின்றும் புறப்பட்டு முன்புபோலே சென்றிறங்கி, இடது கண்ணிடமாக விருந்து பார்க்கும். சிங்குவை யென்னும் நாடி சுழுமுனையினின்றும் புறப்பட்டு முன்புபோலே சென்றிரங்கி முகத்தைப் பொருந்தி... பானியா நிற்கும். பூடாவென்னும் நாடி சுழுமுனையினின்றும் புறப்பட்டு முன்புபோலே சென்றிரங்கி வலது கன்னத்தைப் பொருந்தி

முன்னர்ச் சொன்ன வங்கிலை தன்னின்[20]
மூன்று நாடி தோன்றிக் கீழ்போய்க்
குதத்து மிலிங்கத்தும் பகுத்துட னிற்கு[21]

எல்லாச் சத்தங்களையும் கிரகிக்கும். எச்சுவினி என்னும் நாடி சுழுமுனையினின்றும் புறப்பட்டு முன்புபோலே சென்றிரங்கி இடதுகன்னத்தைப் பொருந்தி எல்லாச் சத்தங்களையுங் கிரகிக்கும். பரிசனு என்னும் நாடி வலது விலாப்புறத்திலும், அவகாசிகா யென்னும் நாடி இடது விலாப்புறத்திலும் பொருந்தி நிற்கும்.

[20]முன்னர்......தன்னில் - இடை பிங்கலைகளிரண்டும் நாபிக்கமலத்தினின்று[ம் கீழ்]நோக்கிப் புறப்பட் டிரண்டு பாதத்திற் பெருவிரலிலு மிறங்கி நிற்கும். அஃதன்றி வாலினி, இலாகினி, மோகினி, கம்பினி, மேதினி என்னு மைந்து நாடியும் நாபியினின்றுங் கீழ்நோக்கிப் புறப்பட்டு வலது பாதத்திற் கடித்தல(ம்), முழந்தாள், கரடு இவைகளைப் பொருந்தி பஞ்சாங்குலிகளி னிற்கும். விகுருதி, விஷமா, மானினி, அங்கினி, விசுவமாலினி என்னும் ஐந்து நாடியும் நாபியினின்றும் கீழ்நோக்கிப் புறப்பட்டு இடது பாதத்திற்கு அடித்தலம், முழந்தாள், கரடு இவைகளைப் பொருந்தி பஞ்சாங்குலிகளி னிற்கும்.

[21]மூன்று......னிற்கும் - மேனோக்கி யோடுகிற சுழுமுனை நாபிக்கமலத்து நின்றும் அலம்புஷை என்கிற நாடியுடன் கீழ்நோக்கி நடுவே புறப்பட்டு இலிங்கத்தைப் பொருந்தி நிற்கும். அந்தப்படியே குகுவென்னு நாடி கீழ்நோக்கி யதனுடன் கூடிப் புறப்பட்டுக் குதத்தைப் பொருந்தி நிற்கும். அந்தப்படியே சங்கினி என்னும் நாடி அதனைப் பொருந்தி நாபி மூலத்தின் நடுவே நின்று நாபிக்குக் கீழுங் குதத்துக்கு மேலுஞ் சஞ்சரியா நிற்கும். வாயு பலவுளவாயினும் பிராணாதி வாயுக்கள் பத்தும் பிரதானமாய் நாடியினடுவே பொருந்திச் சஞ்சரிக்குமெனவறிக. அஃதெவ்வாறென்னில் இராசவர்த்த நிறம் போன்ற பிராணவாயு சுழுமுனையுடனே கூடிச் சஞ்சரியா நிற்கும். சரற்காலத்துச் சந்திரனை [யொத்து] பனிநிறம் போன்ற உதான வாயு பிங்கலையுடனே கூடிச் சஞ்சரியா நிற்கும். இந்திரகோபம் போன்ற அபான வாயு அலம்புஷையுடனும் குகுவுடனுங் கூடிச் சஞ்சரியா நிற்கும். பால்நிறம்போன்ற வியான வாயு காந்தாரி, அத்தி, சிங்குவை, பூடா, எச்சுவினி என்னும் நாடிகளைந்தினும் பொருந்தி அந்த நாடிகளிருக்குந் தானங்களிலே கூடிச் சஞ்சரியாநிற்கும். வாயுக்களில் பிராணாதி ஐந்துமே தலைமையாதலால் இவைகளின் நிறமும் நாடிகளுடன் கூடிச் சஞ்சரியாநிற்கு முறைமையுங் கூறினார்.

மன்னு மபான மிலிங்க முந்தி
உன்னு மார்பு களநுத லுச்சி
சொன்ன தானந் தன்னின் னுமை
மூலா தாரஞ் சுவாதிட் டான
மேன்மணி பூரகம் அனாகதம் விசுத்தி
யாக்கினை பிரம ரந்திர[22] மிதன்

---

ஏனையவும் வந்தழிக் காண்க. அந்தப் பிராணாதி வாயுக்களின் காரியப் பாடு யாதென்னில்,

‘உரத்துற் றுயிர்நாசி யுள்ளோடி மீளு
மரிகதிரில் நீரு மபானன்—இருக்குமிட
நாபிக்கீழ் நாபி நடுநண்ணி யுதானன்
வாயிலினைத் தாபிக்கு மக்காரத்தைத்—தான்...
அன்னத்தின் சாரத்தை நாடிதொறு மாக்கியிடும்
பின்னுஞ்ச மானன் படிவத்தைப்—மின்னும்
வியானன் சுழற்சிமுதன் மெய்வினை செய்விக்கு
நயான நகச்செய்யு நாகன் ............
கண்ணேயிமைப் பித்திடுங்காண் கூர்மன் கிருகரன்றான்
விண்ணினிற் போற்றுமல விளைப்பிக்கும்—பண்ணுவிக்குங்
கொட்டாவி தேவதத்தன் கூறுந் தனஞ்செயன்மெய்
விட்டுமுயிர் நீக்கிவிக்கு மெய்’

என்பதனாலறிக.

இவ்வாசிரியர் பிரதானமான பத்து நாடிக்குங் கூறியிருக்க, ஏனைய நாடிகளையும் வாயுக்களையுங் கூட்டிக் காரியப்பாடுணர்த்தில் மற்றொன்று விரித்தலென்னுங் குற்றமாகாதோ என்னில், ஒப்பின் முடித்தலென்னுந் தந்திரவுத்தியாற் கூறியதென அறிக. இப்படியே நாடிகளின் பகுதிகளையும் வாயுக்களின் பகுதிகளையு முணர்த்தி மேலாதார நிலைமைக்குத் தான முணர்த்துகின்றார்.

[22]மன்னு......பிரமரந்திரம் - இந்தத் தானங்களின் பெயரை யடைவில் (வியு) [சொல்லு]மிடத்து நிலைபெற்ற குதத்துக்கு இரண்டங்குலத்துக்கு மேலும் இலிங்கத்துக்கு இரண்டங்குலத்துக்குக் கீழும் மூலாதாரம். குய்யத்தானத்துக்கு மேல் நாலங்குலஞ் சுவா திஷ்டானம்; நாபிஸ்தானத்துக்கு மேல் எட்டங்குலம் மணிபூரகம். இதயத்துக்கு மேற் பத்தங்குலம் அனாகதம்; கண்டத்தின்மேற் பன்னிரண்டங்குலம் விசுத்தி. தாலு ஆறங்குலம்; புருவமத்திமையி

மேற்சொல் வன்னிதழ்[23] விளம்புங் காலை
நாலா றீரைந்து நண்ணு மீரா
றேலு மீரெட் டிரண்[24]டொன் றுயிரம்

---

விரண்டங்குலம் ஆக்கினை ; உச்சியில் நாலங்குலம் பிரமரந்திரம். இவ் வடைவே ஆதார முதலிய தானங்களிற் பெயரை யடைவிற்பெறும்.

"மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிகள் எழுவிரற்* கீழ்நின்ற
கோவித்த குண்டலி யுள்ளெழு செழுஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழதே" [திருமந். 580.]

என்பதனு லறிக.

'குதத்துமே லிருவிரற் குய்ய நா[ல்] விர
லிதத்திடு நாபி யோடிட் டிதையம்
பதத்த பத்திறு நாவியி லீராறு மன்னிடுந்
துதித்த நாவடி தனிலாறுஞ் சுற்றுமே.

நெற்றியி லிருவிரல் நிற்க நின்றபின்
னுற்றதோர் நால்விர லுச்சியி னெல்லையாய்
நெற்றிய நாற்பத்தெண் விரல்க ளுடொறுங்
கற்றவ ரிதுநிலை கண்டு கொள்ளுமே.'

என்றிவ்வாறு சொல்வாரு முளர்.

ஆன்மா இதயகமலத்திற் பிரதானமாயிருந் தெல்லாக் காரியங் களையும் உன்னுதலால் உன்னுமார்பமெனச் சிறப்பித்தார். எல்லாவற் றிற்கு முந்தியது ஆதாரமாதலால் மூலாதார மென்றார்.

[23]இதன்...இதழ் - இந்தத் தானங்கடோறு மிருக்கும் இத ழெண்களைச் சொல்வாம் ;

[24]விளம்புங்...டிரண்டு - அந்தப் பத்மத்தி னிதழ்களைச் சொல்லு மிடத்து ச, சு, க0, கஉ, கசு எனக் கூறிய இதழ்களையும் விரித் துச் சொல்வாம். அஃதெங்ஙனமென்னில் மூலாதாரத்திற் றூற்று மிதழ் ச. இதனக்ஷரம் வ. ஶ. ஷ. ஸ. இதற்கதிதேவதை விநாயகன் வயிரவன், க்ஷேத்திரபாலன், சண்டன். சுவாதிஷ்டானத்திற்றூன்று மிதழ் சு. இதனக்ஷரம் ப, ஹ, ஃ, ய, ர, ல. இதற்கதிதேவதை பிரதிஷ்டை, சுத்த தவிரினி பாவனை, இருடி, பத்மினி, பரமயோகி என அறுவர். மணிபூரகத்திற் பத்மதளம் க0. இதனக்ஷரம் ட, ட, ண, த, ய, த, ய, ந, வ, ஊ. இதற்கதிதேவதைதூலாக்ஷி, நீலாக்ஷி

---

பி - ம்—*யோனிக் கிருவிரற்.

மறுவறு தாமரை[25] நிறமது நிகழ்த்தில்[26]
வெண்மை பொம்மை செம்மை படிகந்
தண்மைதரு குருந்து புகைத்திரள் பளிங்கு[27]முன்

---

கபிலாவினி, புலங்கினி, உபாகினி, உட்டணி, கைவாசனி. நேத்திர கரி, தவணி, நவணி எனப் பதின்மர்.

அனாகதத்திற் பத்மதளம் ௧௨. இதனக்ஷரம் ௧௨. க, வ, ம, வ, ஈ, வ, ஊ, ஜ, ஙு, ஜ்ஞு, ட, ௦. இதற்கதிதேவதை அபினி, பிரதனி, சோஷிகாஜெராணினி, வேணி, ஆக்ஷணி, சாமுண்டி, விராடி, தர்க்கை, சேட்டை, ஆரணி, சுரணி ஆகப் பன்னிருவர்.

விசுத்தியிற் பத்மதளம் ௧௬. இதனக்ஷரம் ஸ, ஸு, ஐ, ஈ, உ, ஊ, ஜ, ஜு, ள, ளூ, ஏ, ஐ, ஓ, ஔ, ஸம், ஸः. இதற்கதிதேவதை மாண்டி, புட்படி, தரி, சிருங்கி, வடா, அசனி, இராவுத்திரி, தாமகாரணி, சாயா, அற்பாசனி, காளி, துருள்ளாசி, பூபை, சாரிணி, கலாசி கமலா எனப் பதினறுவர்.

ஆக்கினையிலிருக்கும் பத்மதளம் ௨. அதனக்ஷரம் ஹ, க்ஷ. இதற்கதிதேவதை சுந்தரி, ஆனந்தி என இருவர்.

[25]ஒன்று...தாமரை - பிரமரந்திரத்திற் குற்றமற்ற ஆயிரமிதழை யுடைத்தா யிருப்பதொரு தாமரை. இதற்கதிதேவதை சிவசத்தி. ஆக இங்ஙனங் கூறிய ஐம்பத்தொரு தேவதைகளும் தொழிலினலும் ரூபகம்பண்ணி யுணாத்தினர்.

'நாதப் பறைகொட்ட நால்வரும் வந்தனர்
நல்ல வருவறு மியாழ்கொண்டு வந்தனர்
......பதின்மரும் பன்முறை யறைகின்றனர்
பன்னிரு மங்கையர் தாளங்கை கொண்டன
ராடப் பதினறு மங்கைய ரோடே
யாயிழை யாரிருவர் வீணை முழக்கினர்
கூடாத கன்னி குலாவி யுலாவிடக்
கோதண்ட நாயகன் கூத்துகந் தானே' என அறிக.

[26]நிறமது நிகழ்த்தில் - அந்தத் தாமரை யிதழ்களின் நிறங்களைச் சொல்லுமிடத்து.

[27]வெண்மை......பளிங்கு - மூலாதாரம் முதலியன அடைவே தாமரை யிதழ்கள் இங்ஙனங் கூறிய வெண்மை முதலிய நிறங்களைப் பொருந்தி நிற்கும்.

சொன்ன தானஞ் சொறிதழற் றியான
மன்னுமுக் கோணம்[28] வயங்கு நாப்பண்
இயங்கு மசபை[29] நயந்தினி துரைக்கில்[30]*
இருபத் தோரா யிரத்தறு நூறு

---

[28]முன்......கோணம் - முன்னர்க் கூறிய மூலாதாரம் நிலை பெற்ற முக்கோணமாய் அக்கினிச் சுவாலை போன்றிருக்கிறதாக நினைக்க;

[29]வயங்கு......மசபை - வலியினையுடைய முக்கோணத்தின் நடுவே சோமசூரியாக்கினி ரூபமாய் ஹம்ஸ என்னு மூன்றெழுத்தினையுடைய அசபை மந்திர மூலாதாரத்தின்கண் விளங்காநிற்கும்;

நாபிக்குக் கீழாக நால்விரல் மாடத்தே
தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே. [திருமந். 579.]

அருவினி லம்பர மங்கெழு நாதம்
பெருந்துடி யிடையாம் பேணிய விந்து
மருவும் ஹகார ஸகாரம தாகி
மருவி யுடலுறு மந்திரத் திறனே. [திருமந். 960.]

என்ற திருமந்திரத்தாலு மறிக.

[30]நயந்தினிதுரைக்கில் - அந்த அசபை மந்திரம் இயங்கு முறைமையை அறிந்து சொல்லில்; பிராணவாயு இலாடத்தினின் றுதித்து நாடாவினால் ஓடுமாறுபோலச் சித்திரநாடிபாலே இழிந்து மூலாதாரத்தில் ஓமென்றுதித்து நாபிசக்கிரத்திலே ஹம் என்று முட்டி இடைபிங்கலைகளிலே ஸம் என்றோடிக் கபாலத்தைச் சுற்றும். அஃதெங்ஙனமென்னில் இந்திகாதி புவனத்தில் பிரதானமாகிய ஊர்த்த காமினி கலையிற் கோடி சந்திரபிரபைபோல சுழுமுனேசர் இருப்பர். அவருக்கு இடத்தும் வலத்தும் இடைபிங்கலைகள் இருக்குந்தானமாதலால் கபாலத்தைச் சுற்றியதென வறிக.

'பிரிவிலாப் பிராண வாயு நெற்றியிற் பிறந்த மூலத்
தறிவினா லோமென் றந்த நாடியி லங்கென் றேறி
செறிவினாற் சங்கென் றேறிச் சிறந்தபிங் கலையி டைக்கே
குறியினான் முன்னான் கேறி எண்விரல் மீளுங் கொண்டே'

என்பதனாலறிக. அஃதெவ்வாறென்னில்.

---

* துரையும் என்றும் பாடம்,

மருவிய வாயு வலமிட மாக
மாறி மாறி வேறுபா டாகிப்
பூத மைந்தினுந் தோன்றி* நாழிகை
யொன் றுக் கொன் று குன்று தெழுந்து
பன்னிரண் டங்குல முன்னி யோடி
யிருநாலு மீண்டங் கொருநா லொழியு[31]
மிந்தக் கருத்தை சிந்தித் தறிவா
லந்த வாதார மடைவோ ரேழினும்[32]

---

[31]இருபத்......ஒழியும் - அந்தப் பிராணவாயு நாளொன்றைக்கு ஒருவர்க்கிருபத்தீராயிரத்து அறுநூறு சுவாசமா யிடைபிங்கலைகளைப் பொருந்தி ஆகாசமுதலிய பூதங்களைந்தினும் கத்திரிகைக்கோல் போல ஆதாரங்கடோறும் மாறிமாறி அதற்கதற்கு வேறுபாடாய் ஆகாசத்துக்கு அஞ்சரையும், வாயுவுக்கு அஞ்சேமுக்காலும், தேயுவுக்கு ஆறும், அப்புவுக்கு ஆறேகாலும் பிருதிவிக்கு ஆறரையுமாகச் சொன்ன நாழிகையினடைவே ஒன்று குறையாமலும் உச்சுவாச நிச்சுவாசமாய்ப் பன்னிரண்டங்குலம் நாசியினின்றும் புறம்பே புறப்பட்டு எட்டங்குலம் மீண்டு உள்ளே சென்று, பழைய தானத்திலே பொருந்தி நின்று நாலங்குலமும் புறம்பே லயத்தை யடையும் ;

‘ ஒன்றினே டொன்றுமோ ரைந்தினோ டைந்து
முயிர்ப்பறு மாகாதே ’ எனவறிக.

[32]இந்த......எழினும் - நாடோறும் உச்சுவாசமாய் வாயுக்கள் சஞ்சரிக்கு முறையை யாதார மேழினும் அசபை மந்திரத்தைப்... நிச்சுவாச பிரித்துப் பிரித்து கணபதி முதலிய பேர்களிடத்திலே சமர்ப்பணஞ் செய்வான்.

‘ நாலிதழ்க்கு நடுவேவிநா யகனல்ல
வாறுமலர் மேற்பிரமனும்
வேலையுள்மா யனும்பரிந்து மாமலர்
பத்தனுந் தங்கவே
சாலநான் மூன்றிதழ்க்கே யுருத்திரன்
றக்கபத் தாறிதழுன் மகேஸ்வரன்
கோலமான விரண்டா மிதழுளே
ஒருவிருந்து குலாவிய கோலமே’

என ஆதாரா அதிதேவதை யறிக.

இவர்களுக்குக் கொடுக்கு முறைமை எவ்வாறெனில்,

---

பா - ம்—‘ஐந்தினுக் கோது நாழிகை.

பந்தமற நிற்கும் பவனமறு நூறு[33]
மூன்ரு ருயிர மூன்றிட மருவி[34]
மூன்றிட மூவா யிரமென நிறுத்தின
மந்திர மாமெனத் தந்திரஞ் சொல்லு[35]
முன்னு மசபை யோங்கா ரத்து
மன்னு[36] தாபரங் காமிய மலமா
முந்தி மேனு லங்குலி யகாரம்
வந்த தெய்வ மலரயன் மூன்று

---

[33]பந்தமற......நூறு - நாடோறும் ஆன்மாக்களாற் சித்தகர்ம க்ஷயம் பிறக்கையின் பொருட்டு மூலாதாரத்தின் வாயுவுடன் பொருந்திய அசபா மந்திரம் அறுநூறையும் அதிலிருக்கும் விநாயகனுக்கு இரவும் பகலுமாக நான் தனித்தனியே கொடாநிற்கிறேனென்று விண்ணப்பஞ்செய்வான் ;

[34]மூன்ரு......மருவி - சுவாதிட்டானம், மணிபூரகம், அனுகத மெனக் கூறிய ஆதாரம் மூன்றுக்கும் ஒவ்வொன்றுக்கும் அசபா மந்திரம் ஆருயிரம் ஆருயிரமாகப் பிரமன் மால் உருத்திராகிய அதிதேவதைகளிடத்து இரவும் பகலுமாக நான் தனித்தனியே கொடாநிற்கிறேனென்று விண்ணப்பஞ் செய்வான்;

[35]மூன்று......சொல்லும் - விசுத்தி, ஆக்கினை, பிரமரந்திர மெனக் கூறிய ஆதாரம் மூன்றுக்கும் ஒவ்வொன்றுக்கும் அசபா மந்திரம் ஆயிரமாயிரமாக மஹேஶ்வரன், குரு, பரசிவன் ஆகிய அதிதேவதைகளிடத்திலே இரவும் பகலுமாக நான் தனித்தனியே கொடா நிற்கிறேனென்று விண்ணப்பஞ் செய்வான். இப்படிக் கொடுக்கிறதுதானே அசபா மந்திரமென்று **மூலதந்திராவதாரமாகிய** ஆகமஞ் சொல்லும். நாடோறும் இப்படி இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசத்தையும் அந்தந்த ஆதாரங்களிற் கொடுத்தலே அசபாசெபஞ் செய்தலாம்.

[36]உன்னு.........மன்னும் - நாடோறும் உச்சரிக்கப்படாநின்ற அசபாமந்திராதியிலே பிரணவத்தைப் பொருந்தும் ; இங்ஙனம் அசபையின் முறைமையை யுணர்த்தி மேல் மூலாதார முதலிய பிண்டத்தினியல்பையும் பிருதிவி முதலிய அண்டத்தினியல்பையும் உணர்த்துவான் ருெடங்கினுர்.

[37]தாபரங்.........பிண்டம் - நாபிக்கமலத்துக்கு மேல் அகாரம் நாலங்குலம் வியாபகத்தையுஞ் சிறப்பினையுடைய மூன்று மாத்திரையையும் அக்கினிச்சுவாலைபோன்ற நிறத்தினையும் தாபர யோனியையுங் காமிய மலத்தையும் பத்மத்திற்ருேன்றிய அதிபதியாகிய பிர

சிறந்த மாத்திரை நிறந்தழற் கொழுந்து
ஆனது பிண்ட[37] மண்டம் பிருதிவி
பகரில்[38] நூறு யிரகோடி யோசனை
யகல முயரங் கனமொரு கோடி
புவித்திற மான நிவிர்த்தி கலையே[39]
அகாரத் துக்கு மேலெட் டங்குலி
யுகார மாகு முயர்தெய்வம் விட்டுணு
யிரண்டு மாத்திரை யிருகதிர் நிறமே
யோனி யூர்வன விழுகு மலமாம்
பிண்டஞ்[40] சேருமப் பண்டஞ் செப்பிற்
பத்துநூ றுயிர கோடி யோசனை

---

மாவையுமுடைத்தாய்ப் பிண்டத்தின்கண் மேதாகலை விளங்கா நிற்கும். இதனையறிந்து தியானிக்கிற் பிரமலோகத்தை யடைவன். ‘மூவள பிசைத்த லோரெழுத் தின்றே’* எனத் தொல்காப்பியனார் ஓதியிருக்க, ஈண்டு மூன்று மாத்திரையெனக் கூறியது என்னை யெனின், அளபெடையின்கண் கூறியதென அறிக.

[38]அண்டம் பிருதிவி பகரில் - பிருதுவியின்கண் உண்டாகிய அண்டத்தின் விதியைச் சொல்லுமிடத்து;

[39]நூறுயிர......கலையே - நூறுயிரகோடி யோசனை உயரத்தையும் அகலத்தையு முடைத்தாய் அதிற் கோடி யோசனை அண்ட கடாக வோட்டிற் கனத்தையு முடைத்தாய்ப் பிருதிவி தத்துவத்தை யுடைய நிவர்த்திகலை விளங்கா நிற்கும்; இப்பெயர் எக்காரணத்தா லெனில் தன்னையடைந்த ஆன்மாக்களைக்கீழே திரும்ப விடுகையால் நிவர்த்தியெனப் பெயராயிற்று. ஏகார மீற்றசை.

[40]அகார......பிண்டம் - முற்கூறிய அகாரத்தின்மேலே உகாரம் எட்டங்குலி அகலமு முயரமும் வியாபித்து இரண்டு மாத்திரையையும் அதற்கு அதிதேவதையான மாயனையும் பெரிய ஆதித்த பிரகாசம்போன்ற நிறத்தையும் பாம்பு முதலிய யோனியையும் ஆணவமலத்தையுமுடைய பிண்டத்தின்கண் அர்க்கீசர் கலை விளங்கா நிற்கும்; இதனையறிந்து தியானிக்கில் விஷ்ணு லோகத்தையடைவன்.

[41]சேரு......கலையே - அப்பு தத்துவத்தில் அண்டத்தின் விதியைச்சொல்லப் பத்துநூறுயிரகோடியோசனை உயரத்தையும் அகலத்தையுமுடைத்தாய் அதிலிரண்டுகோடி யோசனை அண்டகடாகமாக ஓட்டிற் கனத்தையு முடைத்தாய்ப் பிரதிட்டா கலையைப் பொருந்தி

---

*தொல். எழுத்து. 5.

யொத்த வகல முயரங் கனமே
யிரண்டு கோடி யென்பது விதுவே
பரந்து நிற்கும் பிரதிட்டா கலையே[41]
யுகார மீதே மகாரமெட் டங்குலி
நிகரில் தெய்வமுருத் திரன்மாத் திரையொன்று
மெய்யிருள் விளக்கு மின்னிறம் *பிண்டங்[42]
தேயு வண்டங் தெரியுங் காலை
யிருபது நூறு யிரகோடி யோசனை
கருதிய வகல முயர மாகு
மான்ற கனமொரு மூன்று கோடி
சுத்த மான வித்தியா கலையே[43]
மகாரத் துக்கு மேலெட் டங்குலி
நிகரில் விந்துத் தெய்வ மகேசுரன்
மாத்திரை யரையொளி †தெளிதரு விளக்கே

---

நிற்கும். இப்பெயர் எக்காரணத்தாலென்னில் தன்னையடைந்த ஆன்மாக்களைக் கீழே திரும்ப விடாது மேலே தானே வைக்கையால் பிரதிட்டை யெனப் பெயராயிற்று.

[42]உகார......பிண்டம் - மேற்கூறிய உகாரத்தின் மேலே மகாரமெட்டுவிரல் உயரமும் அகலமும் வியாபித்து ஒரு மாத்திரையையுடைத்தாய், அதற்கு அதிதேவதையான ஒப்பில்லாத உருத்திரமூர்த்தியையும் மின்னைப்போன்ற நிறத்தையும் மிருக யோனியையும் அந்தகாரதீபம் போன்ற மாயா மலத்தையு முடைத்தாய்ப் பிண்டத்தின்கண் விஷகலை விளங்கா நிற்கும் ; இதனை யறிந்து தியானிக்கில் உருத்திர லோகத்தை யடைவன்.

[43]தேயு...கலையே - தேயு தத்துவத்தில் அண்டத்தை யறியுமிடத்து இருபதுநூறுயிரகோடி யோசனை அகலமுயரமு முடைத்தாய் இதிற்பொருந்திய அண்டகடாக மூன்றுகோடி கனத்தையுமுடைத்தாய் வித்தியா கலையைப் பொருந்தி நிற்கும் ; இப்பெயர் எக்காரணத்தாலென்னில் ஆசாரியரிடத்திற் கேட்டுவந்த பொருளைத் திரும்ப அறிவிப்பிக்கையால் வித்தியாகலை யெனப் பெயராயிற்று.

[44]மகாரத்...பிண்டம் - முற்கூறிய மகாரத்துக்கு மேலே ஒப்பில்லாத விந்து எட்டுவிர லுயரமும் அகலமும் வியாபித்து அரை மாத்திரையு முடைத்தாய் அதற்கதிதேவதையான மகேச்வரனைப் பொருந்தி, நன்றாய் எரிகின்ற விளக்கின் பிரகாசம்போன்ற நிறத்தையு

---

பி-ம்—*மேல் மிருகயோனிக்கு மென்னிறம். †அரையே ஒளியுங்.

மாயை மலமர் மருவும் யோனி
ஆயும் பறவை யாகும் பிண்டங்[44]
தப்பி லாத வாயு வண்டம்
முப்பது நூறு யிரகோடி யோசனை
யகல முயர மாகு மென்ப*
வனுங் கனமொரு நாலு கோடி
சாந்தம் வாய்ந்த சாந்தி கலையே[45]
யர்த்த சந்திரன் மூன்றங் குலியே
வைத்த மாத்திரை கால்வா ளொளியா
மிவ்வகை யைந்து மெய்பெறு தூல[46]
நேய மான நிரோதிமூன் றங்குலி
ஆய மாத்திரை யரைக்கா னிறம்புகை
நண்ணுமி யோனி நாற்கா லாகும்
எண்ணு மாயேய மலமென விசைப்பர்[47]

---

முடைத்தாய் மாயாமலத்தையும் விசாரிக்கப்பட்ட பறவை யோனியை யும் உடைத்தாய்ப் பிண்டத்தின்கண் விந்து கலை விளங்கா நிற்கும். இதனை யறிந்து தியானிக்கின் மஹேச்வர லோகத்தை யடைவன்.

[45]தப்பி...கலையே - தனது வியாப்திக்குக் குறைவின்றி யிருக்கிற வாயுவண்டம் முப்பது நூறுயிரகோடி யோசனை விரிவையு முயரத்தி னையு முடைத்தாய் இதிற் பொருந்திய அண்டகடாக வோட்டிற் கனம் நாலுகோடி யோசனையு முடைத்தாய் சாந்ததேவ நாயனாரைப் பொருந்தி சாந்திகலை விளங்கா நிற்கும்; இப்பெய ரெக்காரணத்தா லென்னில் ஆன்மாக்களை...யும் விடுவிக்கப்படுகையாற் சாந்தி கலை யெனப் பெயராயிற்று.

[46]அர்த்த......தூலம் - முற்கூறிய விந்துகலைக்கு மேலே அர்த்த சந்திரகலை மூன்றங்குலத்தை யுடைத்தாய்க் கால் மாத்திரையும் பெற்று வாளினொளி போன்ற நிறத்தையுமுடைத்தாய் விளங்கா நிற்கும்; இவைகளைந்தும் பிண்டத்திற் காணப்பட்ட ஸ்தூலதரிசனம்.

[47]நேய......விசைப்பர் - முற்கூறிய அர்த்தசந்திர கலைக்கும் மேலே ஆன்மாக்களாலே அறியப்பட்ட நிரோதிகலை மூன்றங்குல அகலமுயரமும் உடைத்தாய் அரைக்கால் மாத்திரையுமாகித் தாமிரம் போன்ற நிறத்தையும், அதிற் பொருந்திய பசுமுதலிய நாற்கால் யோனியையுங்கருதப்படாநின்ற மாயையின் காரியமாகிய மலத்தையு முடைத்தாயிருக்குமென் றறிவாலுயர்ந்தோர் சொல்லுவரென அறிக;

---

*இவ்வடி சில பிரதிகளிற் காணப்படவில்லை. (தொடரும்)